# அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம்

(தேவியையும், இறைவனையும் மாற்றி மாற்றித் துதிப்பது.)

**சாம்பேய கௌ3ரார்த4சரீரகாயை**
**கர்பூர கௌ3ரார்த4சரீரகாய ।**
**த4ம்மில்லகாயைச ஜடாத4ராய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 1

சம்பக மலர் போன்ற சுத்தமான பாதி உடலை உடையவனும், கர்ப்பூரம் போன்று வெளுத்த பாதி உடலை உடையவரும்; அழகான பின்னலையுடையவளும் சடைமுடியைக் கொண்டவருமான, 'சிவா' என்ற அம்பிகைக்கும், சிவபெருமானு க்கும் (இவ்விருவரும் ஒருங்கிணைந்த அர்த்த நாரீச்வர மூர்த்திக்கு) நமஸ்காரம்.

**கஸ்தூரிகா குங்குமசர்ச்சிதாயை**
**சிதாரஜ: புஞ்ஜவிசர்ச்சிதாய ।**
**க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 2

கஸ்தூரி குங்குமம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவரும், சிதை பஸ்மத் தால் பூசப்பட்ட உடலையுடையவரும், மன்மதனை உயிர் பெறச் செய்தவளும், மன்மதனை எரித்தவருமான, சிவா என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**ஜ4ணத்க்வணத் கங்கண நூபுராயை**
**பாதா3ப3ஜரரஜத்ப2ணி நூபுராய ।**
**ஹேமாங்க3தா3யை பு4ஜகா3ரங்க3தா3ய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 3

ஒலிக்கிற காப்பு கால் கொலுசுகளையுடையவளும், பாம்புகளாகிற கால் சலங்கையை உடையவரும், தங்கத்தினாலான தோள்வளைகளை உடையவளும் பாம்பையே தோள்வளைகளாகக் கொண்டவருமான,'சிவா'என்ற அம்பிகைக் கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**விசால நீலோத்பலலோசநாயை**
**விகாஸிபங்கேருஹ லோசநாய ।**
**ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 4

விரிந்த கருங்குவளை மலர் போன்ற விழிகளை உடையவளும், மலர்ந்த தாமரை போன்ற கண்களை உடையவரும், இரட்டைக் கண்களை உடையவளும் முக்கண்ணருமான, 'சிவா' என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**மந்தா3ரமாலாகலிதாலகாயை**
**கபாலமாலாங்சித கந்த4ராய ।**
**தி3வ்யாம்ப3ராயை ச தி3க3ம்ப3ராய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 5

மந்தார மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட முடியை உடையவளும், மண்டையோட்டு மாலைகளை கழுத்திலணிந்தவரும், நல்ல பட்டு வஸ்திரங்களை யணிந்தவளும், திசைகளையே ஆடையாய்க் கொண்ட வருமான, 'சிவா' என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**அம்போ4த4ரச்யாமல குந்தளாயை**
**தடித்பரபா4தர்ம்ர ஜடாத4ராய ।**
**நிரீச்வராயை நிகி2லேச்வராய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 6

மேகம் போல் கறுத்த முன் மயிர்களையுடையவளும், மின்னல் ஒளி போல் சிவந்த ஜடைமுடியுடையவரும், : தனக்கு - மேல் ஆளுவோர் இல்லாதவளும் உலகெல்லாம் ஆளும் ஈசனுமான,'சிவா'என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**ப்ரபஞ்சஸ்ருஷ்ட்யுந்முக2 லாஸ்யகாயை**
**ஸமஸ்தஸம்ஹாரக தாண்ட3வாய ।**
**ஜகஜ்ஜனன்யை ஜக3தே3கபித்ரே**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 7

உலகைப் படைப்பிக்கும் நடனத்தை செய்பவளும், எல்லாவற்றையும் அழிக்கும் ஆனந்த தாண்டவரும். உலகுக்கு தாயும், உலகின் ஒரே தகப்பனுமான 'சிவா' என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**ப்ரதீ3ப்த ரேகோ2ஜ்ஜ்வல் குண்ட3லாயை**
**ஸ்பு2ரன்மஹர்பன்னக3 பூ4ஷணாய ।**
**சிவாந்விதர்யை ச சிவாந்விதாய**
**நம: சிவாயை ச நம: சிவாய ॥** 8

ஒளி விடுகிற காது குண்டலங்களை உடையவளும், பெரிய பாம்புகளை காதுக்கு அணிகலனாய்க் கொண்டவரும், எப்பொழுதும் சிவனோடு சேர்ந்தவளும், சிவாவோடு சேர்ந்தவருமானத்'சிவா என்ற அம்பிகைக்கும் சிவபெருமானுக்கும் நமஸ்காரம்.

**ஏதத்படே2த3ஷ்டக மிஷ்டத3ம் யோ**
**ப4க்த்யா ஸமான்யோ பு4விதீர்க4ஜீவீ ।**
**ப்ராப்நோதி ஸௌபா3க்3யமனந்தகாலம்**
**பூ4யாத் ஸதா4 தஸ்ய ஸமஸ்த ஸித்3தி: ॥** 9

எவனொருவன் இந்த எட்டு சுலோகங்களை பக்தியுடன் படிக்கிறானோ அவன் உலகில் புகழ் பெற்று நீண்ட ஆயுளுடன் வெகுகாலம தனக்கு வேண்டிய பாக்யங்களை அடைந்து, எப்போதும் எல்லாவித ஸித்திகளையும் நன்கு பெற்று விளங்குவான்.

